


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## பசும்புல்

பச்சைப் பசிய படர்கொடிப் புல்லே,
அருமண மலரின் புறஇதழ் போலே
அழகிய 'இலை'கள் கெழுமிய புல்லே!!
(ஈரிலை ஓர்மொட்(டு)' எனவரும் தேயிலைக்
காரரின் கதைபோல் சீரிய தளிரும்
ஓரிரு விரிஇலை உருவமு மாகிக்)
காலையின் எழிலை மேலிய தாக்கும்
புல்லே, வளர்வின் நல்லோ வியமே!

வெம்மைக் காந்தல் வெதுப்பிடின் அல்லால்
வியர்வை அறியோம் நாங்கள் ;-நீயோ,
பனிக்குளிர்க் காலை தனித்தனி வியர்த்து
விரிகதிர் வெயிலில் வியர்வை தீர்வாய்!

யாமெலாம் காண ஏதேதோ வடிவில்,
வனப்பில், மணத்தில் மலர்கள் பூத்தே
பிறப்பின் பயனுப் பிறர்க்குறும் இன்பம்
நிறைப்பாய் ;-நிறைவில் நீண்டு வளர்வாய்!

விலங்குகள் கறிக்கவும், மிதிக்கவும், பொறுமை
நலத்தினின் நீங்கா நயத்தினை யாவாய்;
வெம்மையில் வாடி வெதுமையில் கருகி
வறுமையில் செம்மையாய் வாழ்வாய்; மீண்டும்
வளமை பொழியவே, வளர்வாய், மகிழ்வாய்!

உன்னைக் கண்டும் உன்மேல் நடந்தும்
ஒருநா ளாயினும் உன்னுயர்(வு) எண்ணிலேன்,
கார்லைக் கதிருன் மீதில் படியவும்,
உன்னுடற் பனித்துளி ஒளிர்வது கண்டே,
என்மனந் தனிலுமவ் ஒளிபிறந் ததுவோ?
உன்னைக் காணும் தோறும் இதயம்
உழைப்போர் என்னும் உயர்ந்தோர் தம்மை
எண்ணும்; திகைக்கும்! ஏனோ? ஏனோ?
பிறர்க்கே வாழும் பெருமையயே
வாழ்க வாழ்கநீ, மாநிலம் மகிழவே!

—சாலை இளந்திரையன்

## நெய்வேலித் திட்டம்

தமிழ் நாட்டின் பொருளாதாரச் செழுமைக்கும் தொழில் வாய்ப்புக்கும் பேருதவி புரியக் கூடிய ஒரு சிறப்பு வாய்ந்த திட்டமான நெய்வேலித் திட்டத்தை ஆதாரமாகக் கொண்டு சேலம் மாவட்டத்தில் நிறுவப்பெற இருக்கும் இரும்பாலைக்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூ. 25 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

அண்மையில் ஏற்பட்ட இந்திய-அமெரிக்க ஒப்பந்தத்தின்படி நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தில் சேவை புரிய மூன்று யு. எஸ். சுரங்க நிபுணர்கள் இந்தியாவுக்கு வர இருக்கின்றனர். அது மட்டுமன்றி இந்தியாவில் நிலக்கரி உற்பத்தியைப் பெருக்கவும், இந்திய உருக்கு என்ஜினீர்களைப் பயிற்றுவிக்கவும் அமெரிக்க முன்வந்துள்ளது. வேறு பல நாடுகளும் உதவ முன்வந்துள்ளன.

எனவே, நெய்வேலியில் ஆரம்பத்தில் ஆண்டு ஒன்றுக்கு 35 லட்சம் டன் வீதம் பழுப்பு நிலக்கரி வெட்டி எடுக்கத் தீர்மானித்துள்ள நமது உத்தேச அளவு மிக விரைவில் பூர்த்தி செய்யப்பட்டு விடும் என்பதிலோ, நெய்வேலித் திட்டத்தின் பெரும்பயனை நாம் வெகு சீக்கிரத்தில் அனுபவித்து மகிழப் போகிறோம் என்பதிலோ யாருக்கும் ஐயப்பாடு இருக்க முடியாது.



9—7—1961

## மேனாட்டுப் புதுமைகள்:

# கடல்நீரைக் குடிக்கலாம்



'வாருங்கள்! கொஞ்சம் கடல் தண்ணீர் குடிக்கிறீர்களா?' என்று நம்மை யாரும் வரவேற்றால், அந்த வரவேற்பாளர்மீது எரிச்சலும், கசப்பும் ஏற்படுவது இயல்புதான். ஆனால் இனி அவ்வாறு எரிந்து விழ வேண்டியதில்லை. தாராளமாகக் கடல்நீரைக் காப்பி போல்—காப்பி குடிக்காதவர்கள் அவர்களுக்குப் பிடித்த பானம் போல் அருந்தலாம்—அதுமட்டுமல்ல—கடல் நீரைக்கொண்டே உலகில் உணவு உற்பத்தியைப் பெருக்கலாம். ஆம். பயிர்கள் உவரடித்து–நிலமும் உவரடித்துக் கெட்டுப்போகும் என்று யாரும் அஞ்சவேண்டியதில்லை. கடல் நீரைக்கொண்டே பாலையைச் சோலையாக்கமுடியும் என்று கண்டுபிடித்திருக்கின்றனர் அமெரிக்க விஞ்ஞானிகள்.

தண்ணீரின் அருமைபெருமைகளைப்பற்றிப் பெரிய புராணமே பாடிவிடலாம். அண்மையில் ஜான் கரிசன் என்ற அமெரிக்கர் தண்ணீரின் அருமை பெருமைகளை விளக்கும் அருமையானதொரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் அவர் சில அதிசயமான உண்மைகளை வெளியிட்டிருக்கிறார்.

ஒரு பையன் 'ஷவர்பாத்' பூங்குழாய்க் குளியல் குளிக்கவேண்டுமானால் 95 லிட்டர் சுத்த நீர் வேண்டும்.

ஒரு ரொட்டித் துண்டுக்கு வேண்டிய தானியங்கள் விளைய சுமார் 140 லிட்டர் சுத்த நீர் வேண்டும்.

ஒருவர் மாலையில் தமது புல் தரைக்குத் தண்ணீர் தெளிக்க 1100 லிட்டர் தண்ணீர் தேவை.

ஒரு கிலோகிராம் இறைச்சியை தயாரிக்க 32ஆயிரம் லிட்டர் தண்ணீர் தேவை.

ஒரு டன் வைக்கோல் விளைய 8 லட்சத்து 40 ஆயிரம் லிட்டர் தண்ணீர் வேண்டும்.

இந்த உண்மைகளெல்லாம் வேடிக்கையாக இல்லையா?

இவ்வளவு அருமையான தண்ணீரின் விலை மதிப்பு அதிகரிப்பதில் ஆச்சரியமில்லை. அமெரிக்கா ஒவ்வொரு நாளும் 10 லட்சம் கோடி லிட்டர் தண்ணீரைப் பயன்படுத்துகிறதாம்.

நமது கோளத்தின் பரப்பில் 5-ல் மூன்று பங்கு தண்ணீர். அண்மையில் அமெரிக்க குடியரசுத் தலைவர் கென்னடி வாஷிங்டனிலுள்ள ஜனாதிபதி மாளிகையில் ஒரு பொத்தானை அழுத்தி, டெக்ஸால் மாநிலத்தில் ஒரு இயந்திரத்தை இயக்கிவைத்தார். இந்த இயந்திரம் கடல் நீரிலிருந்து குடிநீர் உற்பத்தி செய்கிறது.

இந்த இயந்திரம் அமெரிக்காவில் கட்டப்பட்டுவரும் ஐந்து உப்பு நீர் வடிகட்டும் இயந்திரங்களில் முதலாவதாகும். மேற்படி இயந்திரத்தை இயக்கும் முறையைப்பற்றி அவர் விளக்குகையில், தேனீர் கேத்தல் ஒன்றை நமக்கு நினைவுபடுத்துகிறார். நமக்கு வேண்டிய பொருள்கள் என்ன தெரியுமோ? உப்பு நீரும், தீயும்தான். தீ தண்ணீரை ஆவியாக மாறும் நிலை வரை கொதிக்க வைக்கும். தண்ணீரில் ஒரு பகுதி ஆவியாக மாறும். இந்த நீராவியை நீங்கள் குளிரவைத்தால் சுத்தநீர் கிடைக்கும். கடலிலிருந்து எடுக்கப்பட்ட ஒவ்வொரு 12 லிட்டர் கடல் தண்ணீரிலிருந்து 9 லிட்டர் சுத்தநீர் கிடைக்கிறது. கடல்நீரிலிருந்து சுத்த நீர் எடுக்க பிரீப்போர்ட் இயந்திரம் மட்டுமல்ல—வெய்யில் கொண்டு வடிகட்டுவது—சவ்வு முறை–பல்வேறு குளிரவைக்கும் முறைகள் முதலியனவும் உள்ளன.

இன்னும் பத்தாண்டுக் காலத்திற்குள் கடலில் இருந்து சுத்த நீர் எடுக்கும் மனித முயற்சிகள் காரணமாகப் பாலைவனம் சோலைவனமாகிவிடும் என்பதில் ஐயமில்லை.



## பசிப்பிணி நீக்கும் காளான்

உலகின் உணவுப் பிரச்னையைத் தீர்க்கக் காளான்கள் உதவும் நாள் வெகு தொலைவில் இல்லை. ஆம். உணவு உற்பத்தியோடு போட்டி போட்டுக்கொண்டு வளர்கின்ற உணவுப் பற்றாக்குறையை ஒழிக்க 'நாய்க்குடை' என்ற காளான் பயன்படும் என்கிறார் ஒஹையோ மாநிலப் பல்கலைக் கழகத்துக் காளான் இயல் வல்லுநர் டி. கிரே. இவருக்கு இவ்வாராய்ச்சியில் உறுதுணையாக இருப்பவர்கள் இரு இந்தியர்கள் என்பதும் குறிப்பிடத் தக்கது.

காளான், மலிவான புரத உணவை அதிக அளவில் தரமுடியும் என்பது இப்போது உணரப்படுகிறது. பூஞ்சகானம், ஒரு வகைப் புல்லுருவி, புசிக்கக் கூடிய காளான், நாய்க்குடை முதலியன யாவும் காளான் இனத்தில் சேர்ந்தவையே.

காளான்களைப்பற்றிய சில ருசிகரமான தகவல்களை வெளியிட்டிருக்கிறார் டாக்டர் கிரே. பலரகக் காளான்களை அவரும் அவரது ஆராய்ச்சி மாணவர் சிலரும் பலரகக் காளான்களை உண்டாக்குகின்றனர்.

காளான்களை உண்டாக்குவதா என்று சிலர் வியப்படையலாம். ஆனால் உண்மைதான். 'பூஞ்சகானம்' வகையைச் சேர்ந்த காளானை அவர்கள் இப்போது பயன்படுத்துகின்றனராம். இதற்கு அவர்கள் சுத்தம் செய்யப்படாத 6 ராத்தல் சர்க்கரை, மலிவான சிலவகை தாது உப்புக்கள், தண்ணீர் ஆகியவற்றை எடுத்துக்கொள்ளுகிறார்களாம். இதில் இன்னொரு விந்தை என்ன என்றால், 4 நாட்களில் காளான் மகசூல் கிட்டுகிறதாம். இவ்வாறு வளர்க்கப்பெறுகிற காளானில் 32 சதவிகிதம் புரதச்சத்துக் காணப்படுகிறதாம்: பெரும்பாலான இறைச்சிகளில் 32 சதவிகிதம்தான் புரதம் காணப்படுகிறது. பிற்காலத்தில் நாடெங்கும் சைவ உணவு இயக்கம் தொடங்க இது ஆதரவாக இருக்கும்.

விஞ்ஞான ரீதியில் கால்நடைகளின் இறைச்சிப் புரதம் மிகவும் குறைவானதே என்கிறார் டாக்டர் கிரே.

ஒரு ஏகர் சோளப்பயிரில் 3800 ராத்தல் தானியத்தில் 2100 ராத்தல் சர்க்கரைச் சத்தும், சுமார் 261 ராத்தல் புரதமும் இருக்கின்றன. இந்தச் சோளத்தை இறைச்சிக்குப் பயன்படும் கால்நடைகளுக்குக் கொடுத்தால் அதிலிருந்து நமக்குக் கிடைப்பது 79 ராத்தல் புரதம்தான். ஆனால் இந்த ஒரு ஏகரில் காளான் உற்பத்தி செய்யப்பட்டால் காளானில் 660 ராத்தல் புரதம் கிடைக்கிறது. இது கால்நடைகளுக்குக் கொடுக்கப்பட்டால் 200 ராத்தல் இறைச்சிப் புரதம் கிட்டும். புரதச் சத்துக் குறைவாக இருக்கும்போது காளானையே மனிதர்கள் புசிக்கலாம்.

காளான் உற்பத்திக்கு டாக்டர் கிரேயின் முறை எளிதானதும் மலிவானதும் ஆகும். அவரது ஆய்வுக்கூடத்தில் 5 காலன் கண்

(தொடர்ச்சி 11-ம் பக்கம்)

சர்வோதயம்:

# உணவும் உணர்வும்

காந்தியடிகள் தமது 'சத்திய சோதனை' என்றும் நூலில் உணவுக்கும் உணர்வுக்கும் உள்ள தொடர்புபற்றித் தெளிவாகச் சித்திரித்திருக்கிறார். அதில் அவர் பின்வருமாறு கூறியிருக்கிறார்.

"சரியோ, தவறோ மனிதன் மாமிசம் போன்றவைகளைத் தின்னக் கூடாது என்பதை என்னுடைய மதக் கொள்கைகளில் ஒரு பகுதியாகக் கொண்டிருக்கிறேன். நாம் உயிர்வாழ்வதற்கென்று மேற்கொள்ளும் சாதனங்களுக்கும் ஓர் எல்லை இருக்கவேண்டும். உயிர் வாழ்வதற்கு அவசியம் என்றாலும் சில காரியங்களை நாம் செய்யக் கூடாது. இத்தகைய சமயங்களில் கூட நானோ அல்லது என்னைச் சேர்ந்தவர்களோ மாமிசம், முட்டை போன்றவற்றை உபயோகிப்பதை என் மதம் நான் அறிந்துகொண்டிருக்கிறவரையில் அனுமதிக்கவில்லை.

நிச்சயமற்ற வாழ்வைக் கண்டு அஞ்சாத தன்மை எனக்கு இருந்தது. சத்தியமாக இருக்கும் கடவுளைத் தவிர மற்ற எல்லாமே நிச்சயமற்றதாயிருக்கும். இவ்வுலகத்தில் நிச்சயமான வாழ்வை எதிர்பார்ப்பது தவறு என்று எண்ணுகின்றேன். நம்மைச் சுற்றிலும் தோன்றுபவை நிகழ்பவை ஆகிய எல்லாமே நிச்சயமற்றவையும் அநித்யமானவையுமாகும். ஆனால், இவற்றிலெல்லாம் மறைந்திருக்கும் எல்லாவற்றிலும் மேலானதொரு பரம்பொருள் ஒன்றே நிச்சயமானது. அந்த நிச்சயமான பரம்பொருளை ஒரு கணமேனும் தரிசித்து அதனுடன் தன்னை இணைத்துக்கொண்டுவிடுபவனே பெரும் பாக்கியசாலி. அந்த சத்தியப் பொருளைத் தேடுவதே வாழ்வின் நித்யானந்தமாகும்.

உடைமையின்மைக்கும் எல்லோரையும் சமமாகப் பாவிப்பதற்கும் மனமாற்றமும் நடத்தையில் மாறுபாடும் ஏற்படுவது முதல் அவசியம் என்று எனக்கு வெளிப்படையாகத் தெரிந்தது. என் மனைவியையும், குழந்தைகளையும், என்னையும் படைத்த கடவுள் எங்களைக் காப்பாற்றிக் கொள்வார் என்பதில் திடமான உறுதிகொண்டேன்.

தியாகம், எளிமை என்ற இலட்சியங்கள் என் அன்றாட வாழ்க்கையில் மேலும் மேலும் துரிதமாக ஏற்பட்டு வந்தது. அதே சமயம் சைவ உணவுக் கொள்கையைப் பரப்பவேண்டுமென்ற ஆர்வமும் அதிகரித்துக் கொண்டு வந்தது. ஒரு கொள்கையைச் சரியானபடி பரப்ப வேண்டுமானால் அதற்கு எனக்குத் தெரிந்தது ஒரே ஒரு வழிதான். அந்தக் கொள்கையை நானே கடைப்பிடித்துக் காட்டுவதும் அறிவை வளர்த்துக் கொள்ள ஆராய்ச்சி செய்பவர்களுடன் விவாதித்துக் கொள்வதும்தான். அந்த வழி.

குழந்தையாக இருக்கும்போது உண்ணும் தாய்ப்பாலைத் தவிர மனிதன் பால் சாப்பிட வேண்டிய அவசியமே இல்லை என்பது என்னுடைய திடமான நம்பிக்கை. சூரிய வெப்பத்தினால் பக்குவமான பழங்களையும், கொட்டைகளையும் தவிர மனிதனுடைய உணவில் வேறு எதுவும் இருக்கக்கூடாது. திராட்சை போன்ற பழங்களிலிருந்தும் பாதாம் பருப்புப் போன்ற கொட்டைகளிலிருந்தும் மனிதன் தசைகளுக்கும் நரம்புகளுக்கும் வேண்டிய சத்துக்களைப் போதுமான அளவிற்குப் பெறமுடியும். இத்தகைய உணவோடு இருக்கும் ஒருவருக்குச் சிற்றின் வேட்கை போன்ற இச்சைகளை அடக்குவது எளிதாகிறது.

'ஒருவன் எதைச் சாப்பிடுகிறானோ, அது போலவே ஆகிறான்' என்ற இந்தியப் பழமொழியில் அதிக உண்மை இருக்கிறது என்பதை நானும் என் சக ஊழியர்களும் அனுபவத்தில் கண்டிருக்கிறோம்.

## பாவத்தை உணர்க

'நில உடைமை' பற்றி ரஷ்யப் பேரறிஞர் டால்ஸ்டாயின் கருத்துக் கடலில் ஒரு திவலை: மனிதர்களில் பெரியவர்கள் அறிந்த—இப்பொழுதும் அறிகிற மறுக்கமுடியாத உண்மையை யாவரும் அங்கீகரிக்க வேண்டும். அதாவது நிலம் எந்த மனிதனுடைய தனிச் சொத்தாகவும் இருக்கக்கூடாது; நிலம் தேவையாக உள்ளவர்களை நிலத்தில் நுழையவிட மறுப்பது பாவம்.

'தாம் வாழ்வதற்கு நிலம் தேவைப்படும் மக்களுக்குக் கொடாமல் நிலத்தைத் தம்மிடம் வைத்திருப்பவர்கள் தம் செய்கைக்காக வெட்கித் தலை குனிய வேண்டும். நிலம் தேவையாயிருப்பவர்களுக்கு நிலம் கிடைக்காமல் தடுக்கும் எந்தச் செயலிலும் பங்கெடுத்துக் கொள்ளுதல் ஒரு அவமானமான காரியமென்று யாவரும் உணரவேண்டும். நிலத்தை அதில் உழைக்காமல் வைத்திருப்பதே ஒரு மானக்கேடான காரியம். அதில் தங்களுடைய சட்ட பூர்வமான உரிமை மறுக்கப்பட்டு, நிலத்தில் உழைக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கும் உழைப்பாளிகளின் உழைப்பின் மூலம் இலாபமடைதல் அதனினும் மானக்கேடானதென்று உணர்தல் வேண்டும்.'



## சர்வோதயமே சிறந்த வழி

சர்வோதயக் கொள்கைகளை நிறைவேற்றினால்தான் நாட்டுக்கு விமோசனம் உண்டாகும் என்று சிதம்பரத்தில் நடைபெற்ற சர்வோதயப் பொருட்காட்சி இறுதி நாள் விழாவிற்குத் தலைமை வகித்த திரு. ஓ. பி. ராமசாமி ரெட்டியார் தெரிவித்தார்.



இலக்கிய விளக்கம் :

# பண்பு

கே. ஆர். பசுபதி

வீணையின் நாதம் பொங்கி வரும் வீரட்டானம்! திரு நிறைந்த திருவதிகை! வீசு தென்றல் பேசிவரும் வளமலி நாடு! நாவரசரின் நெஞ்சகத்தில் நிலைபெற்ற வீடு!

எழுந்த திரைகள் மோதி, மோதி நனைந்திருக்கும் இளநிலா திகழும் வளர்சடையும், வெள்ளிக்குன்று போன்ற காளையும், வரிக்கோடுகள் நிறைந்த நாகமும், மேகம் போன்ற மிடறும், கொன்றைமாலையும், பச்சைக்கிளி நிறப் பார்வதியும், படம் போலப் பதிந்து கிடந்தது மருணீக்கியார் மனத்திலே!

நெஞ்சில் உருவாகி உயர்ந்த பிஞ்சு நிலாச்சடையானின் பெருமையைப் பேசிப் பூந்தமிழ் வளர்ந்தது!

நில்லாது ஓடும்நீர் தனது இயல்புக்கு மாறாகச் சடைக்குள் நிலைபெற்றது போல அலைக்கழிப் புக்காளான மனம் நிலையில் நின்றது! கலை ஞானம் பிறந்தது, கலைமானைப் பிடித்த கரத் தருளால்!

அமைதி நிரம்பிய நெஞ்சோடு சிவத்தை உற்று நோக்கினர்! ஆர்ப்பாட்டமும், ஆரவாரமும், ஆதிக்க எண்ணமும், பகைக் கூச்சலும் பொங்கிய பூமியைக் காண்கிறார்.

அப்பரின் சிவம் பண்பாட்டின் முழுமுதல் உருவம்!

நாவரசரின் நெஞ்சம் கொல்லி யானை பகைதீர்க்கும் அறிஞனைக் காண்கின்றது. சிவனைப் "பண்பா" என்று பூரிப்புடன் அழைக்கின்றார்!

பாம்பு, புனல், புதுமதி மூன்றும் பகைகொண்ட, முரண்பட்ட வெவ்வேறு சக்திகள்! அவற்றின் பகைதீர்த்து, உடன்வைத்து உவக்கும் உவமையற்ற சமரச ஞானியாக, சமாதான வாதியாக, பண்பாட்டின் பீடமாக, பக்குவ உருவமாகச் சிவனைக் காண்கிறார் திலகவதியின் தம்பி! பூந்தமிழ் மாலையை நிலாமாலையானுக்குப் போடுகின்றார்!

பகைதீர்த்தும், தீர்ந்தும் வாழ் தலே பண்பாடு எனப்பேரிகை முழக்குகின்றார் பண்பின் பெட்டகமாம சிவத்தைக் கண்டு மகிழ்ந்த செந்தமிழ் நாவலர்சிரிக்கின்றார். சிரிப்பிலே சிந்திய பழம் இதோ!

"பாம்பும், மதியும், புனலும்,
தம்மிற் பகை தீர்த்துடன்
வைத்த பண்பா போற்றி!"

மேலும் மனம் வளர்கின்றது. சமூகச் சூழ்நிலையைப் பார்க்கின்றார். வைராக்யத்தை வளர்ப்பதாகக் கருதி, அது பெண் குலத்தையே வெறுக்கும் அளவுக்கு உச்ச நிலையடைந்து, ஆட்சியாளரின் ஆதரவின் கீழ் நச்சுக் கருத்துக்கள் நெளிர்ந்தன! அதே வேளையில் பெண்குலத்தின் நந்தாவிளக்கான திலகவதியின் தியாக உருவத்தையும் காண்கிறார். வெறுப்பும், தியாகமும் ஒன்றையொன்று தாக்கிக் கொண்டிருக்கும் நிலை!

உள்ளம் மேலும் வளர்கின்றது. பிரமனையும், மாயோனையும், சேயோனையும் பார்க்கின்றார்!

அயன் நாவில் வாணியும், மாயவன் மார்பில் திருவையும், சிவத்தின் பாதி மங்கையும் கூடியுள்ளதைக் காண்கிறார்.

பிரமன் என்றால் வளர்ச்சி, படைப்பு என்று பொருள்!

வளரத் தொடங்கிய மனிதன் பெண்ணை உதட்டளவில் உயர்த்திப் பேச தொடங்கிய காட்சியே பிரமன் வாணியை நாவில் வைத்தது!

மேலும் மனம் விரிந்தது! பெண்ணை உண்மையாகவே, மனமாரப் பாராட்டும் நிலைக்கு வளர்ந்தான். அதுவே, பெண்ணை மார்பில் வைத்த காட்சி!

வாயாரச் சொன்னன். நெஞ்சார நினைத்தான். நடைமுறைக்கு வரவேண்டாமா? செயல்பட்ட காட்சியே பாதியுடலைப் பெண்ணுக்காக்கிய படம்!

மன, அறிவு வளர்ச்சியில் முதல்கட்டம் பெண்ணைப் பாராட்டத் தொடங்கியது. அவன், பெண்ணை "வா நீ" என்று விரும்பி அழைத்தபோது "வாணீ" யானள்!

"மால்" என்ற மயக்க நிலையில் அவள் அவனுக்கு உண்மையிலேயே இனித்தாள்! நெஞ்சிலே நீந்திவரும் மீனனள்! அவனுக்கு அவள் கரும்பு! அவளை மனமாரப் பாராட்டினன். மாலுக்கு இனிய அவள் மாலினியானள்!

மால் தனக்கினியவளை மனத்தில் வைத்த நிகழ்ச்சியே மார்பில் பெண்ணை வைத்தகிலை. இது இரண்டாவது கட்டம்!

சிந்தனை தெளிந்த மனிதன், முதிர்ச்சி பெற்ற மனிதன், பெண்ணைச் சமுதாயத்தின் சரிபாதியாகக் கண்ட மனிதன் அவளுக்குப் பாதியுடலையளித்தான். முழு ஆசையுடன் அவளை நேசித்தான். நேசத்திலே பாதியுடலிலே வாசம் பெற்றாள். சிவகாமியானள்! வாசவியானள்!

ஒலிக்கும் கங்கையையும், ஜொலிக்கும் திங்களையும், சலிக்கும் சர்ப்பத்தையும் உடன் வைத்து உவக்கும் பண்பாடு, படிப்படியாக வளர்ந்து, பெண்ணுக்குப் பாதியுடலைக் கொடுத்து தெய்வநிலைக்கு உயர்த்தி முடிவடைகின்றது! நாவரசர் பண்பாடு எதுவென்று எடுத்துச் சொல்லி தத்துவரீதியான போராட்டம் நடத்துகிறார். தருமசேனராக வாழ்ந்தபோது காணாத உண்மைகளைத் திருநாவுக்கரசராக, தொண்டராக மாறிய வேளையில் காண்கிறார். அவருடைய நெஞ்சத்தின் எதிரொலியென விளங்கிடும் வித்தகப் பாடலைக் காண்போம்.

வெறுப்பதல்ல, விரும்புவது! பிரிப்பதல்ல, இணைப்பது! வாழ்வின் பங்காளியாக்குவது, சமநிலையளிப்பது! இதுவே சுவைப்பது! பண்பாடு!

"பாதியி லுமையாள் தன்னைப்
பாகமா வைத்த பண்பன்".

—அப்பர் தேவாரம்

பாப்பாப் பாட்டு:

## வட்ட நிலா

வட்ட நிலாவே வா வா வா
வானப் பூவே வா வா வா
தட்டு நிறையப் பால்சோறு
தம்பி தருவான் வா வா வா!

எங்கே பகலில் போயிருந்தாய்?
யாருக்கு அஞ்சி மறைந்திருந்தாய்?
தங்கத் தம்பி கேட்கின்ருன்
தயவு செய்தே சொல்லிடுவாய்!

ஏனோ அலைந்து திரிகின்ருய்
இருக்க உனக்கு வீடில்லையோ?
வானை விட்டே வந்துவிடு
வண்ண மாளிகை தருகின்ரேம்!

பாதி நாளில் தேயாமல்
பாம்பும் உன்னை விழுங்காமல்
ஏதும் துன்பம் நேராமல்
இங்கே நாங்கள் காத்திடுவோம்!

# காங்கிரஸ் ஊழியர்களின் பொறுப்பும் கடமையும்

ஜெய்ப்பூரில் நடைபெற்ற காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டமொன்றில் அனைத்திந்திய காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவ ரெட்டி பேசுகையில்,

'தேசத்தின் முன்னுள்ள பெரிய பிரச்னைகளைப் பற்றி காங்கிரஸ் ஊழியர்கள் யோசிக்க வேண்டுமேயன்றி, ஆங்காங்குள்ள உள்ளூர்ப் பிரச்னைகளில் மூழ்கிவிடக்கூடாது' என்று எச்சரித்தார்.

மேலும் அவர் பேசுகையில் குறிப்பிட்டதாவது:

## உள்ளூர்ப் பிரச்னையும் தேசப் பிரச்னையும்

'உள்ளூர்ப் பிரச்னை முக்கியமல்ல என்று நான் கூறவில்லை. அதுவும் முக்கியந்தான். அதற்காக அதிலேயே முழு கவனத்தையும் செலுத்தித் தேசத்தின் பெரும் பிரச்னையை மறந்துவிடக்கூடாது.

## காங்கிரசும் தேசமும்

'காங்கிரஸ் வெறும் அரசியல் கட்சியல்ல—அது ஒரு தேசிய நிறுவனம். காங்கிரசின் வாழ்வும் தாழ்வும் தேசத்தின் வாழ்வும் தாழ்வும் ஆகும்.

## ஊழியர் பொறுப்பு மகத்தானது

'காங்கிரசிடமிருந்து அதிகாரத்தைப் பெற்று ஒழுங்கான அரசாங்கம் அமைத்து நடத்தக்கூடிய வேறுகட்சி ஒன்றுமில்லை. எனவே, காங்கிரஸ் ஊழியர்களின் பொறுப்பு மகத்தானது.

## ஐக்கிய உணர்வு வேண்டும்

'நம்மிடையே ஐக்கிய உணர்வு இல்லையானால் இந்த மிகப்பெரிய நாட்டை ஒரு சின்னஞ் சிறிய நாடும் அடிமைப் படுத்திவிடும். ஒரு மாநில மக்கள் இன்னொரு மாநிலத்தில் வாழக்கூடாது—வாழ உரிமை கிடையாது என்று கருதக்கூடாது. இந்தியா ஒன்று என்றே அனைவரும் எண்ண வேண்டும்.

## மக்களை அணுகிச் செயல்படுக

'மக்கள் தொடர்பை காங்கிரஸ் விட்டுவிடக்கூடாது; தேர்தல் காலங்களில் மட்டுமின்றி எல்லாக் காலங்களிலும் அவர்கள் மக்களை அணுகவேண்டும். காங்கிரசின் திட்டங்களை நிறைவேற்ற அவர்கள் மக்களை அணுகவேண்டும். கிராமப் புறங்களில் மக்களின் ஒத்துழைப்பினால்தான் ஆக்கத் திட்டங்களை நிறைவேற்ற இயலும்'.

## இளைஞர்களுக்கு முக்கியத்துவம்

வருகிற பொதுத் தேர்தலுக்கான அபேட்சகர் ஜாபிதாவில் இளைஞர்களைப் போதிய அளவில் சேர்த்துக்கொள்ளுமாறு பிரதேச காங்கிரஸ் கமிட்டிகளுக்கு காங்கிரஸ் அக்ராசனர் திரு. என். சஞ்சீவி ரெட்டி யோசனை கூறியுள்ளார்.

அபேட்சகர்களைப் பொறுக்கும் போது ஒவ்வொரு ராஜ்யத்திலும் இளைஞர் காங்கிரசில் பணியாற்றிய சில இளைஞர்களைப் பற்றியும் விசேஷமாகக் கவனிக்க வேண்டும் என்று பிரதேச காங்கிரஸ் கமிட்டிகளுக்கு அனுப்பியுள்ள சுற்றறிக்கையில் அவர் கூறியுள்ளார்.

## அபேட்சகரின் தகுதி, திறமை

பொதுத் தேர்தலுக்குக் காங்கிரஸ் அபேட்சகர்களைப் பொறுக்குவதில் தகுதி திறமைதான் உரைகல் என்றும், 10 வருட கெடு முதலிய நிபந்தனைகளை அமல் நடத்தலாகாது என்றும் நேருஜி கருத்துத் தெரிவித்திருக்கிறார்.





10 வருட பதவிக் கெடுவும் பழைய சட்டசபை உறுப்பினர்களில் மூன்றில் ஒருபங்கு ரிடையராகவேண்டும் என்ற யோசனையும் அபேட்சகர்களைப் பொறுக்குவது சம்பந்தமாக அ. இ. கா. க. சுற்றறிக்கையில் பிரஸ்தாபித்திருக்கிறது.

## தேர்தலும் தமிழ் நாடும்

"பிப்ரவரி அறுவடைக்காலம்; பெருவாரியான விவசாயிகள் வாக்களிக்க வருவது கஷ்டம். எனவே மார்ச் மாதத் தொடக்கத்தில் முதல் வாரத்தில் பொதுத் தேர்தலை வைத்துக் கொள்ளலாம் என்று தமிழ்நாட்டு சர்க்கார் யோசனை கூறியுள்ளது.

### குறியீட்டுமுறை

வரும் பொதுத் தேர்தலில் குறியீட்டுமுறைதான் மேற்கொள்ளப் படும் என்று த. நா. தேர்தல் அதிகாரி திரு. எஸ். பி. சீனிவாசன் தெரிவித்திருக்கிறார்.

குறியிடுவதற்குச் சிறு ரப்பர் ஸ்டாம்புகள் பயன்படுத்தப்படும். அதாவது 1·5 அங்குல நீளமுள்ள மரக்குச்சிகளின் நுனியில் ரப்பர் ஸ்டாம்பு பொருத்தப்பட்டிருக்கும். ஒரு வட்டமும் அதற்குள் பெருக்கல் குறியும் இருக்கும். வாக்காளர்கள் ஓட்டுச் சாவடிக்குள் சென்று இந்தக் குச்சிகளை அதிகாரிகளிடமிருந்து வாங்கி வாக்காளர் சீட்டில் ரகசியமாக இந்தக் குறியை அழுத்தி வாக்குகளைப் போடவேண்டியது.

தமிழ்நாட்டில் 1 கோடி 90 லட்சம் தகுதி பெற்ற வாக்காளர்கள் இருக்கிறார்கள். தமிழ்நாடு முழுமையிலும் மொத்த ஜனத் தொகை 3 கோடி 40 லட்சம். தமிழ்நாடு முழுவதிலும் 22 ஆயிரம் ஓட்டுச் சாவடிகள் நிர்மாணிக்கப் பெறும்.






ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

| மலர் 26 | 9—7—1961 | வாரம் 35 |
|---|---|---|

# தகுதியும் திறமையும்

பொதுத் தேர்தல் விரைந்து நெருங்குகிறது. பொதுத் தேர்தலுக்கான அபேட்சகர் ஜாபிதாவில் போதிய அளவு இளைஞர்களைச் சேர்த்துக் கொள்ளுமாறு பிரதேச காங்கிரஸ் கமிட்டிகளுக்கு காங்கிரஸ் தலைவர் திரு. சஞ்சீவி ரெட்டி ஆலோசனை கூறியிருக்கிறார். நாட்டின் ஆட்சிப் பொறுப்பில் இளைஞர்களுக்கு உரிய பங்கு தரப்படவேண்டும் என்பது நியாயமானதுதான். ஆனால் இதை வைத்துக் கொண்டு, —10 ஆண்டுகள் பதவி வகித்தவர்கள் எல்லாம் ஒதுங்கிக் கொள்ள வேண்டும்—அல்லது ஒதுக்கப்பட வேண்டும் என்று விமரிசனம் கூறுவது பொருந்தாது. அதுபோலவே, இளைஞர்கள் என்ற ஒரே காரணத்தால் தகுதியும் திறமையும் அற்றவர்கள் அபேட்சகர்களாக ஆவதையும் ஆதரிப்பதற்கில்லை. "ஒரு நபரின் தகுதியும், திறமையும்தான் அபேட்சைக்கு உண்மையில் உரை கல்லாயிருக்க முடியும்; தகுதியும் திறமையும் வாய்ந்தவர்கள் தேவைக்கு ஏற்ற அளவில் கிடைப்பதில்லை. ஆகவே கிடைப்பவர்களை ஒதுக்கித் தள்ள முடியாது" என்று நேருஜி கூறியிருப்பது சிந்திக்கத் தக்கது.

வயதுவந்த முதியவர்கள்—இன்றியமையாத நபர்கள் அல்லாதவர்களாக இருப்பவர்கள் வேறு வேலைகளைக் கவனிப்பது சரியானதுதான். அவர்கள் மீண்டும் தேர்தலுக்கு நின்று, இன்றைய நிலையில் அத்யாவசிய மானவர்கள் வருவதற்குத் தடையாக இராமல் ஒதுங்கிக் கொள்வது நல்லது — அத்தகையவர்கள் நிறுவன வேலைகளை மேற்கொள்ளலாம். *

## வருந்துகிறோம்

திருச்சி தேசபக்தர் வரிசையில் ராஜகோபால் பிள்ளை, பரிமணம் இருவரும் இந்தவாரம் காலமாய்விட்டது குறித்து வருந்துகிறோம். இந்த மாகாணத்திலேயே அயராத உண்மையான உழைப்பில் திரு. ராஜகோபால் பிள்ளைக்கு இணையானவர்கள் கிடையாது என்று தலைவர் அருணசலம் அவர்கள் தமது அனுதாபச் செய்தியில் கூறியிருப்பது மிகவும் சரியானது. பரிமணம் நெடுநாளைய ஊழியர். அடக்கமும், சாந்தமும் அவரது சிறப்புக்கள். திருச்சி தேசீய வாழ்வுக்கு இவர்கள் மறைவு பெரு நஷ்டம். *

# உலகப் பயணம்

ஜெர்மனிக்குப் போயிருந்த நான் மூனிச்சில் நடைபெற்ற உல்லாசப் பயணிகள் கண்காட்சியைக் காண உள்ளே போகும், ஜெர்மானியர் பலர் என்னை வந்து சுற்றிச் சூழ்ந்து கொண்டனர். அவர்கள் முகங்களிலே பெருமகிழ்ச்சி! என் முகத்திலோ ஏதும் புரியாத ஒரு பெரும் வியப்பு!

'என்ன ஒன்றுமே புரியவில்லையே'—என்றேன்.

'பகோடா, போண்டா, முந்திரிப் பருப்பு' என்றார்கள்.

எனக்கு ஒரு சந்தேகம் நம்மவர்களே ஜெர்மானியர் போல ஏதேனும் களியாட்டம் ஆடுகிறார்களா அல்லது ஜெர்மானியர்கள் திடீரென்று நம்மவர்களாக மாறிவிட்டார்களா என்று புரியவில்லை. அவர்களில் சிலர் என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனார்கள். அழகான மண்டபம் ஒன்று காட்சியளித்தது. ஆம் கண்காட்சியில் அமைக்கப் பெற்ற இந்தியாவின் எழில் மண்டபம்தான் அது. உள்ளே போனோம். ஜெர்மானியக் குழந்தைகள் முந்திரிப் பருப்பு, பகோடா, போண்டா ஆகியவற்றைப் பிரமாதமாகச் சுவைத்துச் சாப்பிட்டன. இன்னொரு புறம், இந்தியாவில் தேநீர் தயாரிக்கும் விதத்தைக் காட்டினார்கள். இவற்றை யெல்லாம் பார்த்தபிறகு, அடுத்த விடுமுறையின்போது ஜெர்மானியரில் 47 சதவிகித்தினர் இந்தியாவுக்கு வர விரும்புவதாகத் தெரிவித்தார்கள்.

நாம் தான் விருந்தோம்புதவில் சளைக்காதவர்களாயிற்றே' என்று ஒரு போடுபோட்டார் இந்தியப் பயணக் காரியாலயத்தின் பிரதிநிதியாக இருக்கும் குமாரி பிஸ்வாஸ். அங்கிருந்த ஒரு ஜெர்மானியர், குமாரி பிஸ்வாஸ் இந்தியாவைப் பற்றிப் பேசிய பேச்சை மிகவும் சிலாகித்துச் சொன்னார்.

அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு ஐ. நா. வுக்குப் புறப்பட்டேன். அங்கே ஐ. நா. காரியாலய உதவிக் காரியதரிசி திரு. சி. வி. நரசிம்மனைப் பார்க்கத்தான் போனேன்; ஆனால், பிரதம காரியதரிசியைத் தான் காண முடிந்தது. நான் பெருமகிழ்ச்சி கொண்டேன்.

'என், உதவிக் காரியதரிசியைக் காண வந்ததற்குப் பிரதம காரியதரிசியின் தரிசனமே கிடைத்து விட்டதே என்று?' என்று கேட்டுவிட வேண்டும். அப்படி யெல்லாம் இல்லை. உதவிக் காரியதரிசி திரு. நரசிம்மன்தான் இப்போது பிரதம காரியதரிசியாக யிருக்கிறார். நான் எனது இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டு அங்கிருந்து புறப்படும்போது அரசியல் பார்வையாளர் சிலரைக் கண்டேன். பிரஸ்தாப பதவி மாற்றம் நடுநிலை நாடுகளுக்கு ஐ. நா. வில் முக்கியத்துவம் கொடுக்கும் முறையில் இருப்பதாகக் கூறினார்கள்'. அவர்களிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன்.

நேரே பர்மாவில் வந்து இறங்கினேன்; அங்குள்ள நமது ஸ்தானிகர் திரு. ஆர். எஸ். மணியைப் பார்த்தேன்.

'என்ன சார், பர்மாவிலிருக்கும் இந்தியத் தொழிலாளர்கள் 'தலைவிதி' எப்படி இருக்கிறது?' என்றேன்.

இந்தியாவுக்குப் பணம் அனுப்பத் தடை விதித்துள்ள பர்மா அரசாங்கத்தின் நடவடிக்கையை ஆட்சேபித்து, மீண்டும் பர்மா சர்க்காரை அணுகி, வழக்கம் போல மணியார்டர் மூலம் பணம் அனுப்ப ஏற்பாடு செய்யுமாறு இந்திய அரசாங்கம் தனக்குக் கடிதம் எழுதியிருப்பதாகவும், தான் சந்தித்து ஆவன செய்ய முடியுமென்று நம்புவதாகவும் கூறினார்.

'விதியே விதியே
தமிழச் சாதியை
என்செய நினைத்தாய்?'

என்ற பாரதி பாடலைப் பாடிய படியே அங்கிருந்து இந்தியா நோக்கிப் பறந்தேன். *

## பாதுகாப்பற்ற சிறுவர்களுக்கு

தமிழ் நாட்டின் எல்லா மாவட்டங்களிலிருந்தும் வந்துள்ள 200க்கு மேற்பட்ட சிறுவர்கள் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலில் குருகுல வாசம் செய்து ஆதாரக் கல்வி முறையில் உயர்தரப்பள்ளி வரை கல்வி கற்று வருகிறார்கள். அவர்களுக்கு உணவு, உடை முதலிய எல்லாவித வசதிகளும் முற்றும் இலவசமாக வழங்கப்பட்டு வருகின்றன.

இது, பள்ளியில் பிள்ளைகளைச் சேர்க்கும் பருவகாலம். அவரவர்கள் குழந்தைகளைப் பள்ளியில் சேர்த்துவிடுவதில் நாட்டில் பரபரப்புக் காணப்படுகிறது. அதே போல உதாரண குணம் படைத்த—பொது நலப்பற்றுடைய எல்லோரும் தமிழ் நாட்டின் எப்பகுதியில் 5 வயது முதல் 8 வயது வரையிலுள்ள தாய் தந்தை இருவருமே யில்லாமல் திக்கற்ற நிலையிலுள்ள சிறுவர்களை மட்டும் காண நேரிட்டால் விவரம் அறிய கடிதம் எழுத வேண்டுமாய் அன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். கடிதம் எழுத வேண்டிய முகவரி:—தலைவர், ஸ்ரீ ராமகிருஷ்ண குடில், திருப்பராய்த்துறை (P. O.) திருச்சி (Dt.)

## வாலாஜாபாத் மகளிர் இல்லம்

'வாலாஜாபாத்தில் அரசினர் மகளிர் உயர் நிலைப்பள்ளி இந்த ஆண்டு தொடக்கப்பெற்று நடந்து வருகிறது. அதில் கல்வி பயிலும் ஏழைப்பெண்கள் சிலருக்கும் இல்லம் (ஹாஸ்டல்) ஒன்று தொடங்குகிறோம். வள்ளலாத் மாணவர் இல்லத்தின் கிளையாக இம்மகளிர் இல்லம் இயங்கும்.

'இவ்வாண்டிலிருந்து மாணவியருக்கு இடம் அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. புதிய எட்டாம் வகுப்பில் படிக்கும் மாணவியர்க்கு முதல் இடம் தருகிறோம்' என்று வள்ளலார் மகளார் இல்லச் செயலர் அறிவிக்கிறார். கடிதம் எழுத வேண்டிய முகவரி: செயலாளர், வள்ளலார் மகளிர் இல்லம், இந்துமத பாடசாலை, வாலாஜாபாத், செங்கற்பட்டு மாவட்டம்.

★




# கடலும் கிழவனும்

எர்னஸ்ட் ஹெமிங்வே என்ற அமெரிக்க நாவலாசிரியர் நேற்று இறந்து விட்டார். தமது கைத்துப்பாக்கியைத் துடைத்தபோது தற்செயலாகக் குண்டு பாய்ந்துவிட்டதென்கிருர்கள். தற்கொலை என்றும் யூகிக்கிருர்கள். எப்படியோ இலக்கிய மேதை ஒருவர் இன்று இல்லை.

'கடலும் கிழவனும்' என்ற இவரது நவீனம் நோபல் பரிசு பெற்றது. தென்னிந்திய மொழிகளின் புத்தக டிரஸ்ட், ச.து.சு. யோகியாரைக்கொண்டு இந்த நவீனத்தைத் தமிழில் பெயர்த்து வெளியிட்டிருக்கிறது.

பிறநாட்டு இலக்கியங்களையோ, ஆசிரியர்களையோ பற்றி நான் அதிகம் அறிந்ததில்லை. எனினும் என் கைக்கு வந்து கிடைத்த அரிய நூல்கள் சிலவற்றை ஆழ்ந்து துய்க்கும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. அவற்றுள் ஒன்று 'கடலும் கிழவனும்'.

வயோதிகச் செம்படவன் ஒருவனுடைய கதை இது. பலநாட்கள் அவனுக்கு ஒன்றும் கிடைக்காமல் போன பிறகும் அவன் நம்பிக்கை குலையாமல், எப்படியும் மாபெரும் மீன் ஒன்றைப் பிடித்தேதீருவதுஎன்ற முடிவுடன் ஒருநாள் கடலுக்குள் போகிருன். எதற்கும் ஈடு கொடுக்கும் வலிமை படைத்த ராட்சத மீன் ஒன்று இவனுடைய தூண்டிலில் அகப்பட்டுக்கொள்ளுகிறது. தூண்டிலுடன் படகை உள்ளிழுக்க மீனும், மீனைத் தூண்டிலில் ஆழக் குத்தி இழுத்துக்கரைசேரக் கிழவனும் போராடுகிருர்கள். மூன்று நாட்கள் இரவு பகலாய் நடைபெறும் இந்த மகாயுத்தத்தைக் கடலும், வானும், கோளங்களும் வேடிக்கை பார்க்கின்றன. நீரில் ரத்த வாடையும் மாமிச நாற்றமும் கடலிலுள்ள ஏனைய சுருமீன்களைக் கூட்டிவிடுகின்றன. அவை அந்தப்பெருமீனைக்கடித்துக் கடித்துக் கரைத்துவிடுவதுடன் அவனுடைய படகையும் தாக்கி அலைக்கழிக்கின்றன. கரையில் வந்து மீனை இழுத்துப் போட்டால், வெறும் கூடுதான் பாக்கியிருக்கிறது. எனினும் லட்சிய சித்தி கிடைத்த மனநிறைவுடன் அவன் தூங்கப் போய்விடுகிருன். அவன் அன்றெல்லாம் சிங்கக் கனவுகளே கண்டான் என்று ஆசிரியர் முடிக்கிருர்.

காதலோ — பெண்ணே இல்லாமல், சம்பவங்கள் ஒன்றுமின்றி ஒரு நெடுங்கதை, இலக்கிய விந்தையாக அமைந்திருக்கிறது.



மீன் பிடிப்பது ஒரு பெரிய லட்சியமா? அதற்கு ஒரு கதையா? இது இலக்கியமா என்றெல்லாம் தோன்றும். இந்த உலகத்தில் மகத்தான லட்சியம், சாதனை யென்றெல்லாம் எதையும் சொல்வதற்கில்லை. ஒரு சாம்ராஜ்யத்தை அமைப்பதுகூட மகத்தான லட்சியமில்லை. விரும்பிய பெண்ணுக்காக உயிரையே கொடுக்க ஒருவன் துணிவதுகூட அப்படிப் பெரிய காரியமில்லை. ஏனெனில் எந்த சாதனையும் உலகில் அழியக்கூடியதுதான்.

இந்த அழிவை அறிந்திருந்தும் ஆக்க சக்தியில் மனிதன் வைத்திருக்கும் நம்பிக்கைதான் விந்தை. அந்த விந்தையை விமர்சிப்பதுதான் கலையின் வேலை. எனவே, எந்த சாகஸத்துக்கும், லட்சியத்திற்கும் காரணமாக அமைகிறமனே பாவம், அல்லது உணர்ச்சி வேகம்தான் நாம் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டிய தத்துவம்,

ஒரு மகாயுத்தத்தை நடத்தி வெற்றிபெறும்வீரன் மட்டும் என்ன பெறுகிருன்? அழிந்துபோன ஒரு நாட்டையும் போர் அவதிகளால் நலிந்துகிடக்கும் மக்களையும் தான். எனினும் வெற்றி என்ற ஒரு உணர்ச்சி லாபம் -அதற்குப் பொருளுண்டோ இல்லையோ – எல்லாத் துயரங்களையும் பிரத்யட்ச நஷ்டங்களையும் தாங்கும் சக்தியைக் கொடுக்கிறது.

பிடித்துவந்த மீனின் தசைப் பகுதிகள் ஏனைய கடற்பிராணிகளால் கொந்தப்பட்டு வெறும் எலும்புக்கூடு மட்டும் எஞ்சிற்று; கிழவன் நிம்மதியாக உறங்கப் போனுன், என்ற முடிவிலும் இதே தத்துவம் தானே கிடைக்கிறது.

எனவே பேரரசர்களின் போர்வெற்றியைச் சித்திரிக்கும் பரணியைவிட மீனுக்கும் செம்படவனுக்கும் நடந்த போர், இலக்கியப் பொருள் சிறப்பில் குறைந்து போக முடியாது. கடலும், அலையும், காற்றும், வானும், மீன்களும் எல்லாமே உயிர் பெற்று வாழ்கின்றன இக் கதையில்.

மனித வாழ்க்கையின் மர்மங்களை, உள்ளங்களின் ஆசாபாசங்களிலும் உணர்ச்சிக் கொந்தளிப்பிலும்தான் காணமுடியுமென்ருல் கடலும் கிழவனும் என்ற கதை ஒரு அமரகாவியமாகும்.

தேவாசுரப் போராட்டத்தின் சுவையும் பெருமையும் கிழவன்-மீன் போராட்டத்திலும் இருக்கிறது. இதை இவ்வளவு ஆற்றலுடன் ஹெமிங்வே சித்திரித்தார் என்பது பெரும் சிறப்புதான்.

ஆயினும் இதைவிடப் பெரும் சிறப்பு என்னவென்ருல், இந்தக் காவியத்தை ஆராய்ந்து அதன் சிறப்பைப் பாராட்டவல்ல கலைஞர்களும் நோபல் பரிசுக் குழுவில் இருந்தார்கள் என்பதுதான். இலக்கியக்கொள்கைகளையும் விமர்சகர்களின் கழுகுப் பார்வைகளையும் தப்பி ஒரு உன்னதமான நூல் உருவாக முடியும்; அதை உணரக்கூடியவர்களும் உலகத்தில் இருக்கிருர்கள் என்ற நன்னம்பிக்கையை நமக்குத் தருகிறது, ஹெமிங்வேயின் சாதனை.

நம்முடைய நாட்டில் சாகித்ய அகாடமிகளைப் பார்த்து அவநம்பிக்கையும் சோர்வும் கொண்டுள்ள நமது எழுத்தாளர்களுக்கு ஹெமிங்வேயின் வெற்றி ஒரு நன்நம்பிக்கை முனை. எப் பொருளையும் கருவியாக வைத்துப் படைப்பின் விந்தைகளை விமர்சித்துவிடலாகும் என்பதை நமது எழுத்தாளர் உணர்ந்துகொள்வதற்கும் 'ஹெமிங்வே' ஒரு வழிகாட்டி.

ஹெமிங்வேயின் மறைவு இந்நூற்ருண்டின்மாமேதை ஒருவரின் மறைவாகும்.



தேசீயத் தொழில்வளம்

# இயந்திர உற்பத்தி

சர்க்கரை ஆலை இயந்திரங்கள் உற்பத்தித் தொழில் இப்போது இந்தியாவில் நன்கு வேரூன்றி விட்டது. கடந்த ஐந்து ஆண்டுகளில் இத்துறையில் பிரமிக்கத் தக்க முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஒரு சர்க்கரை ஆலையை அமைப்பதற்கு வேண்டிய இயந்திர சாதனங்கள் அனைத்தும் இப்போது இந் நாட்டிலேயே தயாரிக்கப்படுகின்றன. நாட்டில் பல பகுதிகளில் அமைக்கப்படவிருக்கும் ஆலைகள் எல்லாவற்றிற்கும் வேண்டிய யந்திர சாதனங்கள் அனைத்தும் உள்நாட்டிலேயே தயாரித்துக்கொள்ள முடியும்.

1951-ம் ஆண்டில் சுமார் 9·20 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள இயந்திர சாதனங்கள் இந்நாட்டில் தயாரிக்கப்பட்டன; ஆனால் 1959-60-ம் ஆண்டிலே மொத்தம் 419 லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள இயந்திர சாதனங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

சர்க்கரை ஆலைக்கு வேண்டிய இயந்திர சாதனங்கள் அனைத்தும் தயாரித்துக்கொடுக்கும் ஏழு தொழிற்சாலைகள் தற்போது இந் நாட்டில் உள்ளன; இயந்திர சாதனங்களில் பல்வேறு பகுதிகளை மாத்திரம் தயாரித்துக் கொடுக்கும் தொழிற்சாலைகள் மொத்தம் 15 உள்ளன.

வெளிநாட்டுக் கம்பெனிகளின் ஒத்துழைப்புடன், கரும்பு ஆலை இயந்திரங்கள் உற்பத்தி செய்து வரும் ஆறு பெரிய உற்பத்தியாளர்கள் ஒன்று சேர்ந்து இரண்டு கூட்டு நிறுவனங்களை அமைத்துக் கொண்டுள்ளனர். பிரபல பிரிட்டிஷ் கம்பெனியொன்றின் ஒத்துழைப்புடன் 'டர்பன்கியர்'களும் மற்ற யந்திரங்களும் உற்பத்தி செய்வதற்காக சமீபத்தில் மற்றொரு கம்பெனிக்கு அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.

இந்தத் தொழிலுக்கென அமைக்கப்பட்டுள்ள பரிசீலனைக் கமிட்டி, 1000 டன்னிலிருந்து 1200 டன் வரை, சர்க்கரை உற்பத்தி செய்யக்கூடிய ஒரு ஆலைக்கு தேவைப்படுகிற இயந்திர சாதன அமைப்பு எம்மாதிரியாக இருக்க வேண்டுமென்பதை வரையறுத்து, அவற்றிற்கான விலைகளையும் நிர்ணயித்திருக்கிறது. புதிய ஆலைகள் அமைப்பதற்கும், பழைய ஆலைகளை விஸ்தரிப்பதற்கும் அனுமதிகோரி, செய்துகொள்ளப்படுகிற விண்ணப்பங்களை நுட்பமாகப் பரிசீலனை செய்யும் பொறுப்பும் இந்தக் கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

முற்றிலும் இந்தியாவிலேயே தயாரிக்கப்பட்ட இயந்திர சாதனங்களைக்கொண்டு அமைக்கப்பட்டுள்ள இரண்டு ஆலைகள் இவ்வருஷம் உற்பத்தி துவங்கிவிட்டன.

இந்தத் தொழிற்சாலைகளில் தற்போதுள்ள வசதிகளைக் கொண்டு ஆண்டு தோறும், சுமார் 12 புதிய சர்க்கரை ஆலைகள் அமைப்பதற்கு வேண்டிய இயந்திர சாதனங்களை இங்கேயே தயாரித்துக்கொள்ள முடியும், இது தவிர, ஒன்பது ஆலைகளை அமைப்பதற்கு வேண்டிய சமமான இயந்திர சாதனங்களை, பழைய ஆலைகளை விஸ்தரிப்பதற்கும், புதுப்பிப்பதற்கும் தயாரித்துக் கொடுக்கமுடியும்.

1660-61 பருவ காலத்திலும், 1962-63 பருவ காலத்திலும் 12 ஆலைகளுக்கு வேண்டிய இயந்திர சாதனங்கள் தயாரிக்க அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.

ஆயினும் 1200 டன் உற்பத்தி சக்திகொண்ட ஆலைக்கு வேண்டிய இயந்திர சாதனங்களுக்கு ஆகும் மொத்தச் செலவு 84 லட்சம் ரூபாய்; இதில் அந்நியச் செலாவணி 16 லட்சம் ரூபாய் அளவுக்குத்தான் இப்போது தேவைப்படுகிறது. போகப்போக டர்பைன்கள், கியரிங்கள், பித்தளைக் குழாய்கள் முதலிய சாதனங்கள் உள்நாட்டிலேயே தயாராகும் போது, அந்நியச் செலாவணித் தேவை பத்து லட்சம் ரூபாய்க்குக் கீழாகக் குறைந்துவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சர்க்கரை ஆலை இயந்திரங்கள் உற்பத்தியில் 1965-66 வாக்கில் ஆண்டுதோறும் 16 கோடி ரூபாய் அளவை எட்டிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கம்

மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் கூட்டமொன்று 3-7-61ல் பிரம்மஞான மந்திரத்தில் நடைபெற்றது. "தொல்காப்பியத்தின் சிறப்பு" என்னும் பொருள் பற்றி வித்துவான் திரு. அ. சிவசுப்பிரமணிய ஐயர் அரியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினர். அன்னாரின் பெருந்தகுதி பற்றியும் சங்கத்திலே தொல்காப்பிய வகுப்பு நடத்தவேண்டிய அவசியம் பற்றியும் 'கல்கி' துணையாசிரியர் திரு. நா. பார்த்தசாரதி ("மணிவண்ணன்") பேசினர். செயலாளர் திரு. வி. ஜி. சீனிவாசன் வகுப்பு நடைபெறக் கூடிய விவரங்களை விளக்கிப் பேசினர். பசுமலை உயர்தரப்பள்ளி தமிழாசிரியர் திரு. ஆ. சண்முகவேலன் நன்றி நவின்றார்.

## கேரளத்தில் தமிழ் எம். ஏ.

கேரள பல்கலைக் கழகத்தில் தமிழ் எம். ஏ. பட்ட வகுப்புக்கள் இவ்வாண்டு முதல் ஆரம்பமாகின்றன. கேரள பல்கலைக் கழக சிண்டிகேட் தமிழ் எம். ஏ. துவங்கும் உத்தேசத்தை இவ்வாண்டு முதலே ஆரம்பிக்க அனுமதித்தது. தமிழ் ஆராய்ச்சித் துறையில் இவ்வகுப்பு ஜூலை முதல் தேதி ஆரம்பமாகி விட்டது.

## கே. எஸ். கே. நினைவுச் சின்னம்

தமிழ் விஞ்ஞான மேதை காலஞ் சென்ற டாக்டர் கே. எஸ். கிருஷ்ணனுக்கு ஒரு நினைவுச் சின்னம் நிறுவ புது டில்லியில் உள்ள தென்னிந்திய சமூக, கலாசார சங்கங்களும், மற்றவர்களும் சேர்ந்து ஒரு தீர்மானம் நிறைவேற்றினர்.



## விஞ்ஞானக் கருவிகள்

இந்தியாவிலுள்ள ஆய்வுக் கூடங்களில் உருவாக்கப்பட்டுள்ள ஏழு புதிய விஞ்ஞானக் கருவிகளைப் பற்றிய விவரங்கள் 'விஞ்ஞான தொழிலியல் ஆராய்ச்சி சஞ்சிகையின் ஜூன் மாத இதழில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவற்றில் மூன்று கருவிகள் வானிலை ஆராய்ச்சிக்கும் அது சம்பந்தப்பட்ட துறைகளுக்கும் உபயோகமாக இருக்கும்.



# படித்தோம் - சொல்கிறோம்

## ஏட்டில் எழுதாக் கவிதைகள்

[தொகுப்பு விளக்கம்: செ. அன்னகாமு, காந்தி கிராமம்.]

ஒரு நாட்டுப் பழங்கால மக்களின் வாழ்க்கையையும், அவர்களின் வாழ்க்கையில் தோய்ந்து மிளிர்ந்த கலாசாரம், பண்பாடு ஆகியவற்றையும் அறிந்துகொள்ள அவர்களிடையே வழங்கிய நாட்டுப் பாடல்களும், கிராமியக் கதைகளும், கிராமியக் கலைகளும் பெருந்துணை புரிவன. அத்தகைய நாட்டுப் பாடல்களும், கிராமியக் கதைகளும் எத்தனை எத்தனையோ நூற்றாண்டுகளாக ஏட்டின் துணையின்றிப் பாமர மக்களின் இதயமும், நாவுமே துணையாகக் கொண்டு வளர்ந்துவந்திருக்கின்றன—வளர்கின்றன என்பது அப்பாடல்கள், கதைகளின் சிறப்பியல்புகளை நாம் அறிய உதவும்.

இலக்கியங்கள் யாவற்றிற்கும் ஆதிமூலமாகத் திகழுவன அந்த எழுதாக் கவிதைகளே என்பதில் கருத்துவேறுபாடில்லை இற்றை நாளில் திரைப்படங்களில் அந்த நாட்டுப் பாடல்களும், நாட்டுப் பாடல்களின் 'இசை'களும் சற்று மாற்றியும், திரித்தும் கையாளப் படுகின்றன.

இவ்வாறு, இற்றை இலக்கியங்களின் ஆதிமூலமாகத் திகழும் அன்றையப் பாமர இலக்கியத்தை, ஏடறியா இலக்கியத்தை ஏட்டிலே ஏற்றி நாட்டு மக்களிடையே நடமாடவிடும் முயற்சி இப்போது பெரும்பாலும் பரவலாக எல்லா நாடுகளிலும் மேற்கொள்ளப்பட்டிருப்பது பெரு மகிழ்ச்சிக்குரியது.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையிலே, கடந்த சில ஆண்டுகளாகவே ஆங்காங்கே அவ்வப்போது சிற்சில 'ஆர்வலர்'களால் இம் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வந்திருக்கிறது-தொடர்ந்து நடைபெறுகிறது. இத் துறையிலே திருவாளர்கள் மு. அருணாசலம் கி. வா. ஜகந்நாதன், வானமாமலை போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள், 'எழுத்தாளன்' ஆசிரியர் திரு. ரெட்டியார் சேகரித்து வைத்திருக்கும் பல நூற்றுக் கணக்கான கிராமியப் பாடல்கள் நூலாக வெளிவரின் அஃது கிராமிய இலக்கியத்தின் எவரெஸ்ட் ஆகத் திகழும். திருச்சி வானொலி நிலையமும் இத் துறையில் மிகச் சிறந்த பணியாற்றிவருவதற்காகத் தமிழ் மக்கள் நன்றி செலுத்தவேண்டும்.

அண்மையில், காந்தி கிராமத்தைச் சேர்ந்த திரு. செ. அன்னகாமு, 'ஏட்டில் எழுதாக் கவிதைகள் என்ற ஒரு நூலைத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார். அவர், பாடல்களின் ஒரு வரியையோ, வார்த்தையையோ மாற்றாமல், எதுகை மோனை என்று கூறி எதையும் திருத்தாமல், சுருக்கமாகக் கூறினால் உருச் சிதையாமல் வெளியிட்டிருக்கிறார் என்பது பாராட்டத்தக்கது. இத் தொகுப்பில் தமிழகப் பெருங்குடி மக்கள், தாம் உழைக்கும்போது சோர்வு ஏற்படாமல் உற்சாகம் மேலிட்டு வளரப் பாடிமகிழ்ந்த பாடல்களையும் தாலாட்டுக்கள், ஒப்பாரி, குழந்தைகள் விளையாடும்போது பாடிய பாடல்களையும், கதைப் பாடல்களையும் இவற்றையொத்த பிற பாடல்களையும் தனித்தனித் தலைப்பின்கீழ் தொகுத்து, கருத்துத் தெளிவுக்காகத் தேவையான விளக்கக் குறிப்புகளையும் எழுதிச் சேர்த்திருக்கிறார்.

ஏறத்தாழ 200 பக்கங்கள் கொண்ட இப் புத்தகத்தை உருவாக்க ஒரு மாமாங்கம்-12 ஆண்டுகள் ஆகியிருக்கின்றன என்று அன்பர் அன்னகாமு கூறுவதில் ஆச்சரியப்படவேண்டியதில்லை. உள்ளபடியே இது ஒரு மாமாங்க முயற்சி என்றால் நம்பத்தான் வேண்டும்.

விலை ரூ. 2-50
சர்வோதய பிரசுராலயம்
தஞ்சாவூர்

## ஊர்தோறும் மின்சாரம்

இன்று கிராமங்களில் ஒளி விளக்குகள் அழகு செய்கின்றன. விவசாயத்திற்கு மின் விசை பயன்படுத்தப்படுகிறது-தொழில்கள்—ஆலைகள் இப்படி என்னென்னவோ முன்னேற்றம். மின் விசை உற்பத்திக்காக எவ்வளவெவ்வளவோ புதிய நீர்த் திட்டங்கள், அனல் மின்சார நிலையங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவற்றையெல்லாம், அறிந்துகொள்ளாத அப்பாவித்தனத்தாலோ, அறிந்திருந்தும் வேண்டுமென்றே விதண்டாவாதம் பேசுவது என்ற அடாப்பிடித்தனத்தாலோ நமது சாதனைகளுக்குத் திரைபோட முற்படுகிறவர்களின் கூற்றைப் பொது மக்களுக்கு விளக்கிக் கூறவேண்டுவது நாட்டுப் பற்றுள்ளவர்களின் கடமையும் பொறுப்பும் ஆகும். அதற்கான ஒவ்வொரு துறையிலும் நமது முன்னேற்றத்தை விளக்கத்தக்க வகையில் த. நா. காங்கிரஸ் அவ்வப்போது பிரசார வெளியீடுகளை வெளியிட்டுவருவது மிகவும் நல்ல பணியாகும். இப்போது, ஊர்தோறும் மின்சாரம் என்ற நூலை வெளியிட்டு, மின்சாரத் துறையில் நம் நாடு பெற்றுள்ள முன்னேற்றத்தைப் புள்ளி விவரத்தோடு விளக்கிக் கூறத்தக்க வகையில் உதவி புரிந்துள்ளனர். திரு. சோ. செல்வன், நல்ல அழகான தமிழில்—விரும்பிப் படிக்கத்தக்க விதத்தில் இந்நூலை எழுதியிருக்கிறார்.

விலை 10 காசு
தமிழ்நாடு காங்கிரஸ், சென்னை-6.

—சாமி பழ

★

## எஸ். எஸ். எல். ஸி. தேருதவர்களுக்கு
### தொழிற் பள்ளி

எஸ். எஸ். எல். ஸி. தேருதவர்களும், 4-வது பாரம் தேறியவர்களும் சேர்ந்து தொழிற் பயிற்சி பெற்றுப் பயனடைவதற்காகத் திருச்சி சேவாசாயி தொழில் நுணுக்கக் கல்லூரியில் புதிய பொறியியற் பள்ளி ஒன்று ஆரம்பிக்கப்பெற இருக்கிறது என்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்யாதவர்களும் 4-வது பாரம் தேறிய பிறகு அறை குறையாக நிறுத்திவிட்டவர்களும் ஏராளம். அவர்களுக்கெல்லாம் இந்தப் புதிய பள்ளிக்கூடம் பேருதவியாக இருக்கும்.

இப்பள்ளியில் தச்சுவேலை, கொல்லு வேலை, மின்சார சம்பந்தமான வேலைகளில் பயிற்சியளிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. மேற்படி பள்ளியை ஆரம்பிக்க அரசாங்கத்திடமிருந்து உரிய அனுமதியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகவும், அது கிடைத்ததும் ஆரம்பிக்கப் பெறும் என்றும் சேவாசாயி மின்சாரக் கம்பெனி நிர்வாகக் கமிட்டித் தலைவர் திரு. ஜி. ஆ. பெ. விசுவநாதம் தெரிவித்திருக்கிறார்.

★

## விவசாயப் பள்ளிகள்

கல்வி கற்ற இளைஞர்களுக்கு விவசாயத் துறையில் பயிற்சியளிக்க இவ்வாண்டில் தமிழ்நாட்டில் 6 விவசாயப் பள்ளிகள்—இரு மாவட்டத்திற்கு ஒன்று வீதம் துவக்கப்பெறும். இவற்றையும் அரசாங்கமே நடத்தும் என்றும், முதற் பள்ளி காட்பாடியிலும், இரண்டாவது பள்ளி இராமநாதபுர மாவட்டம் பரமக்குடியிலும் ஆரம்பிக்கப் பெறும். ஏனைய பள்ளிகள் பற்றிய இடம் இன்னும் உறுதியாகவில்லை.

★

## டாக்டர் கே.எஸ். பிள்ளை

இராவ்பகதூர் கேப்டன் எஸ். குமாரசுவாமிபிள்ளை பெங்களூர் காக்ஸ் டவுனில் உள்ள தமது இல்லத்தில் கடந்த மே மாதம் 17-ம் தேதி இரவு 7-மணி சுமாருக்கு மாரடைப்பினால் காலமானார். டாக்டர் பிள்ளையவர்கள் பல்லாண்டுகளாக ஜில்லா மெடிகல் ஆபீஸராகத் தமிழ் நாட்டில் தொண்டாற்றிக் கடைசியாகச் சென்னை சர்க்காரின் சர்ஜன் ஜனரலின் பர்சனல் அஸிஸ்டண்டாகப் பணியாற்றி 1942-ல் ஓய்வு பெற்றார். மனிதப்பண்பாட்டிற்கும், மக்களிடம் காட்டும் மரியாதைக்கும், பரிவுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கிய திரு. பிள்ளையவர்கள் மாசுமறுவற்ற குணமும் ஒழுக்கமும் உடையவர் என்று புகழ் பெற்றவர். வாழ்நாள் முழுவதும் பிறருக்காகவே உழைத்தவர் டாக்டர். அவருக்கு வயது 78.

அவரது மனைவி, புதல்வர், புதல்விகளுக்கும் அவரது மருகரில் ஒருவராகிய திருவாசகமணிக்கும் நமது அனுதாபங்கள்.

★

( 2-ம் பக்கத் தொடர்ச்சி )

ணுடிப் புட்டிகளில் காளான் வளர்க்கப்படுகிறது. 10 ஆயிரம் காலன் தொட்டிகளிலும் எளிதில் வளர்க்கமுடியுமாம்.

அடுத்து, வட அமெரிக்காவிலுள்ள ஒரு மரத்தின் தூளைப் புரதமாக மாற்றும் ஒரு ரகக் காளானைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் டாக்டரும் அவரது ஆராய்ச்சி மாணவர்களும் ஈடுபட்டிருக்கிறார்களாம். இந்த முறைக்கு ஏராளமான தண்ணீர் வேண்டுமாம். உப்புத் தண்ணீர், நல்ல தண்ணீர் இவற்றிலிருந்தே காளானை உற்பத்தி செய்யமுடியுமாம். அட்லாண்டிக் பெருங்கடல் தண்ணீரில் உற்பத்தி செய்யப்பட்ட காளானில் சுத்த நீரில் உற்பத்தி செய்யப்பட்ட காளானின் புரதத்தைவிட 30 சதவிகிதம் புரதம் அதிகமாக இருக்கிறதாம்.

கடல்நீருக்கா பஞ்சம்? எனவே' உலகத் தேவைக்கே காளான்களை உற்பத்தி செய்துவிடலாமே.



# நோயும் குணமும்

## மாந்தம்

டாக்டர் கு. கு. முத்து

குழந்தைகளுக்கு வரும் வியாதிகளில் மாந்தம் என்ற வியாதியும் ஒன்று.

மாந்த வியாதியில் பல விதங்கள் உண்டு.

வேறு பெயர்:— மாந்தம், அலசம், அலசகம் என்றும் கூறுவதுண்டு.

இயல்:— சாப்பிட்ட ஆகாரம், தாய்ப்பால் சீரணிக்காமலும் வாந்தியாகாமலும், கீழ் நோக்கிப் போகாமலும் இரைப் பையிலேயே! தங்கி வயிறு இரைதல், ஏப்பம் விட விரும்பினாலும் இயலாமை, வாந்தி எடுக்க முயன்றாலும் வாந்தி வராமை போன்ற துன்பங்களுடன் ஆரம்பிக்கும் நோய்தான் மாந்தம்.

நோய் தோன்று வழி:— தாய்ப்பால் குடிக்கும் குழந்தையின் தாய் கண்ட கண்ட ஆகாரங்களை நினைத்த நேரங்களில் சாப்பிடுவதும் ஒரு (மாதத்திலிருந்து பத்துமாதம் வரை வயதுள்ள குழந்தையின் தாய்) ஒரு வயது பூர்த்தியான குழந்தைகளும் அதன் தாயும் மாமிசப் பதார்த்தங்கள், மாவுப் பதார்த்தங்கள், ஆட்டுப்பால், மாட்டுப்பால் அளவுக்கு மீறி சாப்பிடுதல் அதனால் ஷ ஆகாரங்கள் வயிற்றில் செரிக்காமல் தங்கி மாந்த நோயை வளர்க்கும். மேலும் ஆண், பெண் சேர்க்கை தாய்ப்பால் குடிக்கும் சமயங்களில் இருந்தால் மாந்த வியாதி ஏற்படும்.

சர்க்கரை வள்ளிக்கிழங்கு, மாம்பழம், தேங்காய், பலாப்பழம், சுரைக்காய், கீரைத் தண்டு, கடலை, மீன், கோழி, பன்றிமாமிசம் முதலியவைகளை குழந்தையின் தாய் அதிகமாக —தினம் சாப்பிடுவதாலும் மாந்த வியாதி உண்டாகும்.

மாந்த வியாதியின் பொதுக் குறி, வயிறு உப்பிசம் ஏற்படும்; வயிற்றைத் தட்டினால் டும், டும் என்ற சப்தம் இருக்கும். வயிறு கெட்டியாகவும், சில சமயங்களில் இரைச்சலுடனுமிருக்கும். கை, கால், முகம் இழுப்பு இருக்கும். மஞ்சள் நிறமாக பேதியாகும். சாப்பிட்ட ஆகாரம் வாந்தியாகும். அடிக்கடி மயக்கம் கண்களில் முழிகள் சுழித்தல், வியர்வை ஏற்படுதல், சுரம் அடித்தல்.

மாந்த வியாதியில் 31 விதங்களுண்டு.

அவை தலைமாந்தம், விஷ மாந்தம், நீர்மாந்தம், செரியா மாந்தம், வறள் மாந்தம் கட்டு மாந்தம், பால் மாந்தம், ஊதுமாந்தம், கல்மாந்தம், வலிப்பு மாந்தம், போர் மாந்தம், சந்நி மாந்தம், பேய் மாந்தம், துலை மாந்தம், சுர மாந்தம், உப்பு மாந்தம், கண மாந்தம், எரி மாந்தம், சுழி மாந்தம், முக்கு மாந்தம், வீக்கம் மாந்தம், வாந்தி மாந்தம், திட்டு மாந்தம், உளை மாந்தம் அக்கர மாந்தம், நீர்க்கணமாந்தம், தோட மாந்தம், கர்ப்ப மாந்தம், கழி மாந்தம், வலி மாந்தம் முதலியன.

இவை யாவுமே குழந்தைகளுக்கு வருவதுண்டு. மாந்த வியாதி வராமல் இருக்க நோய் தோன்றும் வழி என்ற தலைப்பைக் கவனித்து தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகளின் தாய்மார்கள் இருந்தார்களானால் மாந்த நோய்கள் வராமல் பாதுகாக்கலாம்.

மாந்தநோய் குழந்தைகளுக்கு ஏற்படும் சமயங்களில் அனுபவமுள்ள நாட்டுவைத்தியரிடம் சிகிச்சை செய்வது நலம்.

மாந்த நோய்க்குப் பொதுச் சிகிச்சை:—

கோழி முட்டையின் மஞ்சள் கருவை எடுத்துத் தைலம் இறக்கி ஷ தைலம் 5 சொட்டுகளுடன் தாய்ப்பாலில் கலந்து (டீஸ்பூன்) கொடுக்கவும் மூன்று நாட்கள் தாய் புளி இல்லாத பத்தியம்.

வசம்பை நன்ருகச் சுட்டுக் கரியாக்கி வென்னீரில் அறைத்துக் குழந்தையின் வயிற்றில் தடவவும்.

கோழி முட்டையிலிருந்து தைலம் எடுக்கும் முறை: இரும்பு (வால்) கரண்டியில் மஞ்சள் கரு வேண்டிய அளவு (நான்கு முட்டைகள்) போட்டு கருகும் வரையில் அடுப்பில் வைக்கவும் கரு நன்ருக வெந்து கறுப்பாகி சுடர்விடும். அது சமயம் தீய்ந்து விடாமல் மற்ருெரு பாத்திரத்தில் சொட்டு சொட்டாகப் பிடித்து உபயோகித்துக் கொள்ளவும்.

### வாழ்த்துகிருேம்

கரூர் முனிசிபல் கவுன்சிலரும் நேஷனல் இண்டியா டெக்ஸ்டைல்ஸ் கூட்டாளியுமான திரு. கே. வி. நடராஜன் அவர்களின் சகோதரர் பாஸ்கர பஞ்சாங்க கணிதர் பண்டித பாஸ்கர ஜோஸ்யரின் குமாரன் சிரஞ்சீவி வெங்கட்ரமணனுக்கு 23-6-61-ல் கரூரில் உபநயனம் சிறப்பாக நடைபெற்றது. செல்வனுக்கு நமது வாழ்த்துக்கள்!



Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji News printers, 24, A-Theradi Bazaar, Tiruchi-2.